


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
33rd year
of Publication
23—6—1968


# பெற்றோர்களையும் மிஞ்சும் மாணவர்கள்

"புலி எட்டடி பாய்ந்தால், குட்டி பதினாறு அடி பாயும்" என்ற பழமொழி மனித குலத்திற்கும் இது பொருந்தும். பெற்றோர்களைவிட குழந்தைகள் திறமைசாலிகளாக விளங்குகிறார்கள். 20 ஆண்டுகளுக்கு முன்பிருந்த குழந்தைகளைவிட, இப்போதிருக்கும் குழந்தைகள் அதிகமான அளவு கல்வி கற்கிறார்கள் என்று ஜெர்மன் கல்வி நிபுணர் கருத்து தெரிவித்து இருக்கிறார்.

தற்போதைய குழந்தைகள், 20 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த குழந்தைகளுடன் ஒப்பிடும்போது அதிக அறிவு படைத்தவர்களாக இருக்கிறார்களா? இல்லையா? இக்கேள்விக்கு பதில் அளிப்பது எளிது. பெற்றோர்களைவிட தற்காலக் குழந்தைகள் 'மக்குகளாக' வளரவில்லை. 20 ஆண்டுகளுக்கு முன்பிருந்த குழந்தைகளைவிட இப்போதைய குழந்தைகள் அதிகமான அளவு கற்கிறார்கள், நாகரீகத்தின் பெயரால் கவனத்தை சிதறடிக்கும் பலவித சாதனங்கள் வந்த போதிலும், குழந்தைகள் கவனம் செலுத்தி படித்து வருகிறார்கள்.

மேற்கு பெர்லின் நகரிலுள்ள சுதந்திரப் பல்கலைக் கழக கல்வி விஞ்ஞான நிலையத்தில் விரிவுரையாளராகப் பணியாற்றும் டாக்டர் சார்லீன் இசன்காம்ப் இது குறித்து ஆராய்ந்து இம்முடிவுக்கு வந்திருக்கிறார்.

ஒரேவித சூழ்நிலையில் 6 ஆண்டுகள் பள்ளியில் படித்த குழந்தைகளிடம் 1949ம் ஆண்டிலும் 1962ம் ஆண்டிலும் நடத்தப்பட்ட சோதனைகளைக் கொண்டு இம் முடிவுக்கு அவர் வந்தார். 'குழந்தைகளின் கல்வி கற்கும் திறன் குறைந்து வருகிறது' என்ற கருத்து பொதுவாக நிலவி வருகிறது. இது தவறு என்பது 'சர்வே' நடத்தியபோது தெரிய வந்தது. அனுபவம் பெற்ற 29 ஆசிரியர்களை டாக்டர் இசன்காம்ப் விசாரித்தார். பல ஆண்டுகளுக்கு முன்பு படித்த மாணவர்களைவிட தற்போது படிக்கும் மாணவர்கள் புத்திக் கூர்மையுடனும் விளங்குகிறார்கள். எதையும் கற்றுத் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆர்வம் இருக்கிறது.

எழுத, படிக்க, கணக்குச் செய்யும் திறன் அடிப்படையில் மேற்கு பெர்லின் மாணவர்களைச் சோதனை செய்யப்பட்டார்கள். இம்மூன்று விஷயங்களிலும் மாணவர்கள் தெளிவாக அபிவிருத்தி அடைந்திருப்பது தெரிந்தது. குறிப்பாகக் கணக்குப் போடுவதில் மாணவர்கள் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்தார்கள். எனவே வகுப்பு மாணவர்களின் சராசரியும் உயர்ந்தது. பள்ளிகளின் தரமும் வெகுவாக உயர்ந்ததும் மற்றொரு காரணமாகும். பெரிய வகுப்புகளில் திறமையான போதனையின் பயனாக, மந்தமான மாணவர்களும் துரிதமாக கல்வி கற்றுத் தேற வசதிப்பட்டது. புதிதாக கல்வித் திட்டம் வகுக்கப்படும் போது இந்த அம்சத்தை நினைவில் கொள்ள கல்விச் சீர்திருத்தம் செய்யும் நோக்குடன் பெர்லின் கல்வி நிபுணர் மேலும் பல ஆராய்ச்சிகள் மேற்கொண்டிருக்கிறார். பெற்றோர்களின் வேலைக்கும், குழந்தைகளின் பள்ளிப் படிப்புக்கும் சம்பந்தமுண்டா என்பதை அறிவதில் இவர் தற்போது ஈடுபட்டிருக்கிறார்.

——

# நவீன விவசாயத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு

குருடம்பாளையம் கிராமத்தைச் சேர்ந்த ஸ்ரீ ரங்கஸ்வாமி ஓர் மாதிரி விவசாயியாக விளங்குவதற்கு நிறைய காரணங்கள் இருக்கின்றன. உயர் விளைச்சல் தரும் உணவுத் தானிய ரகங்களையே அவர் ஏற்றுக்கொண்டிருக்கிறார்; சிறந்த சாதனங்களைப் பயன்படுத்துகிறார்; பண்ணை விஸ்தரிப்பு அதிகாரிகள் தருகின்ற ஆலோசனையை அவர் அப்படியே பின்பற்றுகிறார். தமது ஓர் ஏகரா பண்ணையில் 4,544 கிலோகிராம் நெல் விளைவித்து 1966-67ல் தமிழ் நாட்டு பயிர் விளைச்சல் போட்டியில் அவர் முதல் பரிசைத் தட்டிக் கொண்டார். இந்தத் தனிச் சிறப்பை அவர் அடைவதற்கு, அவர் பயன்படுத்திய கோ-25 ரக நெல்தான் உதவிற்று. இந்த ரகம் கோயம்புத்தூர் விவசாயக் கல்லூரி நிபுணர்கள் வகுத்த விவசாய முறைகள் அத்தனையும் அவர் உறுதியுடன் பின்பற்றினார்.

1959-60ம் ஆண்டிலும் கூட ஸ்ரீ ரங்கசாமி ஏகரா ஒன்றுக்கு 5,480 ராத்தல் நெல் அறுவடை செய்திருக்கிறார். 1960-ல் ஏகரா, ஒன்றுக்கு 6,800 ராத்தல் நெல் அறுவடை செய்து, ராஜ்ய பயிர் விளைச்சல் போட்டியில் அவர் பரிசு பெற்றார். மற்ற விவசாயிகளும் தங்களது விளைச்சலை அதிகரிப்பதற்காக அவர் வழிகாட்டியும், உதவியும் வருகிறார். நவீன விவசாயக் கழகமாக அவர் ஆகிவிட்டதில் வியப்பென்ன இருக்கிறது?

——

# THE KARUR VYSYA BANK LIMITED, KARUR. Balance Sheet as at 31st December, 1967.

| 1966 Rs. Ps. | CAPITAL AND LIABILITIES | Amount Rs. Ps. | Total Rs. Ps. |
|---|---|---|---|
| | 1. CAPITAL: | | |
| 25,00,000 00 | Authorised Capital 1,00,000 Equity (ordinary) shares of Rs. 25/- each ... | 25,00,000 00 | |
| | Issued, Subscribed and Paid-up Capital | | |
| | (a) 32,170 Equity (ordinary) Shares of Rs. 25/- each paid-up ... | 8,04,250 00 | |
| ,54,250 00 | (b) 18,000 Bonus shares of Rs. 25/- each | 4,50,000 00 | |
| | | | 12,54,250 00 |
| 13,86,168 00 | 2. RESERVE FUND AND OTHER RESERVES: | | 14,09,963 15 |
| | Includes Rs. 91,896/- being amount standing to the credit of share premium account | | |
| | 3 DEPOSITS AND OTHER ACCOUNTS: | | |
| 4,61,89,839 00 | Fixed Deposits ... | 4,67,43,509 70 | |
| 65,55,113 00 | Savings Bank Deposits ... | 74,36,278 45 | |
| | Current Accounts, | | |
| 1,09,77,343 00 | Contingency Accounts etc., ... | 1,20,33,996 15 | |
| 6,37,22,295 00 | [redacted] | | 6,62,13,784 30 |
| | 4. BORROWINGS FROM OTHER BANKING COMPANIES, AGENTS Etc., | | |
| | 1. In India Nil | | |
| | 2. Outside India Nil | | |
| | PARTICULARS: | | |
| | 1. Secured by lodging G. P. Notes Face Value Rs. 60,61,200 | | |
| | Fixed Deposits Rs. Nil | | |
| | 2. Unsecured Rs. Nil | | |
| 12,04,797 00 | 5. BILLS PAYABLE | | 15,70,371 91 |
| 47,56,799 00 | 6. BILLS FOR COLLECTION BEING BILLS RECEIVABLE (AS PER CONTRA): | | 67,79,622 20 |
| | 1. Payable in India Rs. 67,79,622-20 | | |
| | 2. Payable outside India Rs. Nil | | |
| | 7. OTHER LIABILITIES: | | |
| 6,425 00 | Unpaid dividends ... | 9,411 89 | |
| 15,20,433 00 | Interest on Deposits Accrued ... | 14,42,134 59 | |
| 40,797 00 | Charity Fund ... | 41,296 63 | |
| 25,924 00 | Provident Fund Nil | | |
| 57,692 00 | Gratuity Fund ... | 62,691 75 | |
| 2,49,745 00 | Sundries .. | 3,20,163 02 | |
| 91,176 00 | Branch Adjustment ... | 3,47,810 10 | |
| 18,703 00 | Interest received in Advance for Loans ... | 9,505 54 | |
| 73,000 00 | Investments Reserve ... | 73,000 00 | |
| 28,280 00 | Bad & doubtful debts Reserve ... | 16,547 23 | |
| 4,58,500 00 | Income-tax Reserve ... | 3,78,500 00 | |
| 25,70,677 00 | | | 27,01,060 75 |
| 40,550 00 | 8. ACCEPTANCES, ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS (PER CONTRA): | | 1,41,000 00 |
| | 9. PROFIT & LOSS | | |

| 1966 Rs. P.s | PROPERTY AND ASSETS | Amount Rs. Ps. | Total Rs. Ps. |
|---|---|---|---|
| 72,48,913 | 1. CASH: In hand and with Reserve Bank and State Bank of India (incluеing Foreign Currency Notes—Nil) | | 76,22,979 61 |
| 40,98,427 | 2. BALANCES WITH OTHER BANKS IN INDIA: | | 17,63,355 22 |
| 31,98,427 | In current accounts ... | 17,63,355 22 | |
| 9,00,000 | In Fixed Deposits Nil | | |
| | (Outside India) Nil | | |
| 2,00,000 | 3. MONEY AT CALL AND SHORT NOTICE: | | 2,00,000 00 |
| 1,47,73,829 | 4. INVESTMENT AT COST: | | 1,56,07,565 07 |
| 1,42,93,329 | Government Securities ... | 1,51,27,065 07 | |
| 4,50,000 | Debentures | 4,50,000 00 | |
| 30,500 | Shares | 30,500 00 | |
| | (i) Securities of the Central and State Government and other Trustee Securities including Treasury Bills of the Central and State Governments. F. V. Rs. 1,55,90,100 | | |
| | (ii) Shares Rs. 25,000 | | |
| | Preference shares Rs. 25,000 | | |
| | Ordinary shares Rs. Nil | | |
| | (iii) Debenture or Bonds (Face value) Rs. 4,50,000 | | |
| | (iv) Other Investments [redacted] Nil | | |
| | (v) Gold Nil | | |
| | The market value of the above Shares & Debentures as on 31-12-67 is [redacted] Rs. 4,59,425 | | |
| 4,18,10,442 | 5. ADVANCES: | | 4,60,02,081 48 |
| | (Other than bad and doubtful debts for which provision has been made to the satisfaction of the auditor) | | |
| 3,75,05,580 | 1. Loans, Cash Credit, Over drafts etc., | | |
| | (i) In India [redacted] ... | 4,05,21,359 34 | |
| | (ii) Outside India [redacted] | | |
| | (2) Bills Discounted and purchased (excluding Treasury Bills of the Central and State Governments). | | |
| 43,04,862 | (i) Payable in India | 54,80,722 14 | |
| | (ii) Payable outside India Nil | | |
| | Particulars of advances (separate schedule attached) | | |
| 47,56,799 | 6. BILLS RECEIVABLE BEING BILLS FOR COLLECTINN (AS PER CONTRA) | | 67,79,622 20 |
| | (i) Payable in India Rs. 67,79,622-20 | | |
| | (ii) Payable outside India Nil | | |
| 40,550 | 7. CONSTITUENT'S LIABILITIES FOR ACCEPTANCES ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS (PER CONTRA) | | 1,41,000 00 |
| | 8. PREMISES: | | |
| 7,53,915 | Buildings at cost as per last Balance Sheet ... | 8,11,248 40 | |
| 57,333 | Add: Additions during the year ... | 3,379 64 | |
| 8,11,248 | | 8,14,628 04 | |
| | Less: Sales during the year Nil | | |
| 88,526 | Less: Depreciation to-date | 1,06,679 18 | |
| 7,22,722 | | | 7,07,948 86 |
| | 9. FURNITURE AND FIXTURES: | | |
| 4,43,907 | At cost as per last Balance Sheet ... | 4,85,787 75 | |
| 42,149 | Add additions during the year ... | 7,752 00 | |
| 4,86,056 | | 4,93,539 72 | |
| 268 | Less: Sales during the year | 1,256 95 | |
| 4,85,788 | | 4,92,282 83 | |
| 2,12,762 | Less: Depreciation to date | 2,42,186 85 | |
| 2,73,027 | | | 2,50,095 98 |
| | 10. OTHER ASSETS, (INCLUDING SILVER Nil) | | |
| 92,444 | (1) Books and forms on hand | 81,697 59 | |
| 8,421 | (2) Interest, Commission and Miscellaneous Receivable on Loans etc. | 3,580 53 | |
| 2,89,677 | (3) Interest Receivable on Investments | 2,35,944 68 | |
| 6,27,082 | (4) Advance payment of Incometax and tax deducted at source | 6,58,398 88 | |
| 1,26,705 | (5) Rent and other advances | 1,27,637 27 | |
| 743 | (6) Court expenses Recoverable | 615 75 | |
| | Motor car Rs. 47102 06 | | |
| | Add. Additions during the year Nil | | |

## கரூர் வைஸ்யா பாங்கு லிமிடெட், கரூர்.

பதிவு அலுவலகம்: ஜவஹர் பஜார், கரூர்.

நிர்வாக சபையாரின் 49-வது அறிக்கை.

1. 31-12-1967ம் தேதியோடு முடிவான சென்ற வருடத்திய தணிக்கை செய்யப்பட்ட பாலன்ஸ்ஷீட்டையும், லாப நஷ்டக் கணக்கையும் 21-6-68ம் தேதி வெள்ளிக்கிழமை காலை 10-05 மணிக்கு பாங்கின் பதிவு அலுவலகத்தில் கூட இருக்கும் மகாசபையாருக்கு சமர்ப்பிப்பதில் மகிழ்ச்சி கொள்கிறோம்.

2. சென்ற ஆண்டில் மொத்த லாபம் ரூ. ஏழு லக்ஷத்திற்கு அதிகமாகவும், டிபாசிட் மேலும் ரூபாய் கால் கோடி உயர்ந்து, லாபமும் வரவு சிலவும் திருப்திகரமாக உள்ளது. எனினும் நம்மால் எடுத்துக் கொள்ளப்பட்ட பாங்குகளின் அலுவலர்கள் அனைவருக்கும் நம் பாங்கின் சம்பள அடிப்படையில் சம்பளம் நிர்ணயம் செய்து உயர்வு அளித்தது மூலமும், வாழ்க்கைக் குறியீட்டுச் சிலவின் உயர்வின் மூலமும் சென்ற ஆண்டில் சம்பளச் சிலவு சுமார் ரூபாய் ஐந்து லக்ஷம் வரை உயர்ந்துள்ள போதிலும் நிகர லாபம் ஓர் அளவு உயர்ந்துள்ளது.

3. நாம் எடுத்துக் கொண்டுள்ள பாங்குகளின் கிளை அலுவலகங்கள் உட்பட நம் பாங்கின் வரவு சிலவு திருப்திகரமாகவே உள்ளது. சமூகக் கட்டுப்பாட்டின் அடிப்படையில் பாங்கின் தொழில் முறைகளை மாற்றி அமைக்க ஆவன செய்து கொண்டிருக்கிறோம்.

4. சென்ற ஆண்டின் மொத்த நிகர லாபம் ரூ. 4,32,209-45 ஆகும். அதில் அலுவலர் ஒரு மாத போனசுக்கு ரூ. 89,000/-மும் வருமான வரிக்கு ரூ. 2,20,000/-மும் ஒதுக்கியது போக நிகர லாபம் ரூ.

# உணவு உற்பத்தியில் புரட்சி

மாட்டுச் சாணம், சாம்பல், தழைகள், பிற கழிவுப் பொருள்கள் இவைகளை மட்டுமே எருவாகப் பயன் படுத்தி வந்தநிலைபோய் இன்று ரசாயன உரங்கள் பெருமளவில் பயன்படுகின்றன.

களை எடுத்தல் தவிர பயிர் பாதுகாப்புக்கு வேறு எதுவும் செய்யாதிருந்த காலம் போய் இப்போது பூச்சி, வெட்டுக்கிளி, எலிதொல்லைகளிலிருந்து பயிர்களைப் பாதுகாக்க நவீனமுறைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

உழவு, விதைத்தல் அறுவடை போன்ற முக்கியமான பிற வேலைகளிலும் முன்னேற்றம் கண்டால் உற்பத்தி பெருமளவில் உயரும் என்பதில் சந்தேகமில்லை.

வளர்ந்துவரும் பல நாடுகளில் மரக்கலப்பைகளில் மாடுகளை பூட்டி உழுவதும், விவசாயத் தொழிலாளர்களே நாற்றுகளை பறித்து நடுவதும், அவர்களே வயல்களில் இறங்கி அறுவடை செய்வதும் இன்னும் கடைப்பிடிக்கப்படும் பழக்கமாகும். இவ்வளவு வேலைகளுக்கும் இயந்திரங்களைப் பயன்படுத்த முடியுமா என்றால் நிச்சயமாக முடியும். அதனால் நன்மைகள் உண்டா என்றால் பெருத்த நன்மை உண்டு என்று உறுதியாகக் கூறலாம்.

'அகல உழுவதைவிட ஆழ உழுவதேமேல்' என்று ஒரு பழமொழி உண்டு. எவ்வளவு ஆழமாக உழுகிறோமோ அவ்வளவு பயிர் செழிப்பாக வளருவதுடன், கதிர்களும் நிறைந்து காணப்படும் என்பதாலேயே இந்த வழக்கு. என்னதான் முயன்றாலும் இயந்திரம்போல் ஆழமாக மனிதனால் - மாடுகளின் உதவியோடு—உழமுடியாது.

அதுமட்டுமல்ல. ஆண்டாண்டுகாலமாக பயிர் செய்து பண்பட்டுப்போன நிலங்களில்தான் மேலும் மேலும் கலப்பையால் உழுவது எளிதாகயிருக்கிறதேயொழிய கட்டாந்தரை, கரம்பு நிலங்கள் இவற்றில் கலப்பை பயன்படாது. அப்படியே பயன்படுத்தினாலும் கலப்பையின் 'கொழு' வீணாகிவிடும். இதனாலேயே பெரும்பாலும் கிராமத்து மக்கள் அதில் அக்கறை காட்டுவதில்லை. எனவே அவை அப்படியே – பயன்படாமல் – தரிசாகக் கிடக்கின்றன- வளர்ந்து வரும் விவசாய நாடுகளில் கணிசமான நிலப்பரப்பு இதுபோல் தரிசாகவே கிடக்கிறது. உற்பத்தி பெருகுவதில் அக்கறை காட்டி வரும் அரசாங்கங்கள் எல்லாம் முதலில் இப்படி தரிசாகக் கிடக்கும் நிலங்களை விவசாயத்துக்கேற்ப மாற்றவேண்டும். இதற்கு சிறந்த வழி இயந்திரங்களைப் பயன்படுத்துவது தான். கரம்பு நிலங்களில் செடிகொடிகளை அகற்றுதல், கிளறிவிட்டுசமப்படுத்துதல், பிறகு ஆழமாக உழுவது வரை எல்லா வேலைகளையும் இயந்திரங்கள் செய்துவிடும். மேலும் வாரக்கணக்கில் செய்யவேண்டியவேலையை இந்த இயந்திரங்கள் நாட்கணக்கில் செய்துவிடுவதால், ஒரு போக நிலங்களில் இரு போகமும், இருபோக நிலங்களில் முப்போகமும் பயிரிடவும் வாய்ப்பு இருக்கிறது.

சில நாடுகளில் காளைமாடுகளுக்கு பதில் கறவை மாடுகளையேகூட ஏரில் கட்டி உழுகிறார்கள். பாவம்! காலையில் பாலைக் கறந்து கொண்டு, பிறகு ஏரில் பூட்டி நாள்முழுவதும் உழுதுவிட்டு, பிறகு மாலையில் மீண்டும் பால் கறக்க வேண்டும் என்றால் அந்தப் பிராணிகளின் நிலை என்ன?

இத்தனை தொல்லைகளையும் நீக்கிவிடுமே, இயந்திரக் கலப்பைகள்!

அறுவடையிலும் இதே நிலைமைதான். ஒரு ஏக்கர் நிலத்தை ஒரு ஆள் அறுவடை செய்ய ஒரு வாரம் ஆகலாம், அதற்குப் பிறகு களத்து மேட்டில் அடிக்கவும், தூசி, பதர்நீக்கி நெல்லைப் பிரிக்கவும் மேலும் சில நாட்கள் தேவைப்படுகின்றன. ஆனால் இயந்திரத்தின் மூலம் ஒரே நாளில் இவ்வளவு வேலைகளையும் முடித்துவிடலாம்.

பூச்சி மருந்து தெளிப்பது பல நாடுகளிலும் பரவலாக்கப்பட்டுள்ளது. இருப்பினும் இதில் இன்னும் முன்னேற்றம் காண வேண்டியிருக்கிறது. இன்னமும் பல நாடுகளில் இந்த மருந்தை தண்ணீரில்கலந்து 'வாளி'களில் வைத்துக்கொண்டு கையால் தெளித்து வருகிறார்கள். இது மனித ஆரோக்கியத்திற்குக் கெடுதலாகும். தெளிப்பவரின் உடல்நலமே இதனால் பாதிக்கப்படக் கூடும். மேலும், எல்லா இடங்களிலும் பரவலாகவும், சீராகவும் இந்த முறையில் தெளிக்க முடியாது. மருந்து அதிகமானால் அது பயிரையேகூட அழிக்கக்கூடும். இதற்கும் ஒரு இயந்திரம் இருக்கிறது. பிளாஸ்டிக்கினால் ஆன பெரிய பைகளில் 2 அல்லது 3 காலன் சொள்ளும் பூச்சி மருந்தை நிரப்பிக்கொண்டு இயந்திர உதவியால் சீராக மருந்தைத் தெளிக்க முடியும். இந்தப் பைகளில் அளவு கோடுகள் உண்டு. தேவையான அளவு மருந்து தெளிக்கப்பட்டதுடன் நிறுத்திவிடலாம்.

இப்படி விவசாய முறையில் நவீன முறைகளைக் கையாண்டு இயந்திரக் கருவிகளைப் பயன்படுத்தி பயிர் செய்தால் உற்பத்தி பன்மடங்கு பெருக நிச்சயம் வாய்ப்பிருக்கிறது. விவசாயத்திற்கு மிகவும் பயன்படும் இதுபோன்ற இயந்திரங்கள் பிரிட்டனில் பெருமளவில் தயாரிக்கப்பட்டு அபிவிருத்தியடைந்துவரும் பல நாடுகளுக்கும் – குறிப்பாக காமன்வெல்த் நாடுகளுக்கு – அனுப்பப்பட்டு வருகின்றன.

நேற்றுவரை கலப்பையும் மண்வெட்டியும் பயன்படுத்தி வந்த ஒரு விவசாயியிடம் இன்று 'டிராக்டரை' நிறுத்தி உழச் சொன்னால் அவரால் இயலுமா? எனவே முழுக்க முழுக்க ஒரே நாளில் இயந்திரமாக்கிவிட முனையாமல் படிப்படியாக இந்தத்துறையில் அபிவிருத்தியடைந்தால் இயந்திரங்களை இயக்குவது விவசாயிகளுக்கு எளிதாக இருக்கும். பற்றாக்குறை நீங்கி தன்னிறைவு பெறவும், உபரி உற்பத்தி காணவும் இது வழிவகுக்கும்.

## டைபாயிடு காய்ச்சலுக்கு

# பல்கேரிய தடுப்பு ஊசி

டைபாயிடு காய்ச்சலுக்கு மிகச் சிறந்த தடுப்பு ஊசி மருந்து ஒன்றைபல்கேரியா வில் உள்ள கொள்ளை நோய்கள் மற்றும் நுண் கிருமிகள் ஒழிப்பு ஆராய்ச் சிக் கழகத்தில் பணியாற்றி வரும் மருத்துவ நிபுணர் களான டாக்டர் நிகோலா மேசார்ஸ்கியும், டோடார் விடானேவும் கண்டுபிடித் திருக்கின்றனர். எட்டு ஆண்டுக்காலம் இடையறாத ஆராய்ச்சியும் பரிசோதனை களும் செய்து அவர்கள் இந்த ஊசி மருந்தைக் கண்டுபிடித்திருக்கின்றனர்.

உலகம் முழுமைக்குமான கணக்கீடுகளின்படி 1950 முதல் 1965 ஈறாக உலகின் பல்வேறு பகுதிகளிலும் உள்ள 115 நாடுகளில் 20 லட்சத்துக்கும் அதிகமான வர்கள் டைபாயிடு நோய் கண்டு இறந்ததாகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. விஞ் ஞான வளர்ச்சியின் முன் னணியில் இருந்துவரும் ஐரோப்பாவிலுங்கூட டைபாயிடு நோய்க்கு பலர் பலியாக நேர்ந்திருக்கிறது. ஸ்பெயின், இத்தாலி, பிரான்சு, யூகோஸ்லாவியா ஆகிய நாடுகளைச் சேர்ந்த பலர் டைபாயிடு நோய்க்கு இரையாகியுள்ளனர். ஆனால் இந்த நோயினால் அதிக அளவு சாவு ஏற்பட்டிருப் பது ஆசியா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா ஆகிய கண்டங் களிலேதான். டைபாயிடு நோய்க்கான சிறந்த தடுப்பு மருந்துகள் ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்டு இருப் பதை மறப்பதற்கில்லை. ஆனால் இந்த மருந்துகளின் குறைபாடு என்னவென்றால் வெப்பத்தினாலும் குளிராலும் அவை வெகுவாக பாதிக் கப்பட்டு விடுகின்றன. என் பதுதான். மேலும் இந்த மருந்துகள் இரண்டு ஆண்டு காலத்துக்கு மட்டுந்தான் பலன் அளிக்கத்தக்கவை யாக இருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட சீதோஷ்ண நிலையில் இவைகளைப் பாது காத்தாக வேண்டும். இல்லாவிட்டால் இவை வீரியம் இழந்து விடுகின் றன. மேலும் இந்த மருந்து களை ஊசியின் மூலம் செலுத்துவதால் வீக்கமும் வலியும் உண்டாகின்றன. எனவே பெருபாலானவர் இந்தத் தடுப்பு ஊசி மருந்து களைப் போட்டுக்கொள்ள முன் வருவதில்லை.

பல்கேரிய மருத்துவ நிபுணர்கள் இப்போது கண்டுபிடித்துள்ள தடுப்பு மருந்து இந்தக் குறைபாடு கள் ஏதும் அற்றதாகும். இதன் சிறப்பு அம்சம் இது உலர் மருந்து என்பதுதான். அதாவது இந்த மருந்து திரவமாக அல்லாமல் நன்கு உலர்ந்த தூளாகவே இருக் கும். அதன் காரணமாக இது எத்தகைய தட்ப வெப்ப நிலையிலும் கெட்டுப் போகாமல் இருக்கும். மேலும் இந்த ஊசி மருந் தைப் போட்டுக்கொள்பவர் களுக்கு அதன் காரண மாகக் காய்ச்சலோ வலி வீக்கம் போன்ற உபத்திர வங்களோ ஏற்படாது.

டைபாயிடு காய்ச்சலைத் தோற்றுவிக்கும் கிருமிகளை பரிசோதனைக் குழாய்களில் அடைத்து மனித உடலின் எந்த உறுப்புக்கும் எவ்வித உபத்திரவமும் விளையாத வண்ணம் அந்தக் கிருமி களைக் கொல்லுவதற்கான முறை என்னவென்று பல் கேரிய மருத்துவ நிபுணர் கள் ஆராய்ந்து சில ரசா யனப் பொருட்களைத் தேர்ந் தெடுத்து இந்த தடுப்பு மருந்து சரியாக வேலை செய்கிறதா என்று பார்க்க அவர்களிருவரும் தங்கள் உடம்பிலேயே அதைச்

[ 8-ம் பக்கம் பார்க்க ]

# ரயில்வேயின் சாதனை

இது ஒரு அவசரயுகம். எதிலும் வேகம் வேண்டும் என்ற கருத்து எங்குமே நிலவுகிறது. வேகம் மட் டும் இருந்தால் போதுமா? விபத்தில்லாமல் பத்திர மாகப் போய்ச்சேர வேண் டாமா? ஜெர்மனியர் வேக மாகவும் அதே சமயத்தில் ஆபத்து ஏற்படாத நூதன ரயில் வண்டியை உருவாக்கி யிருக்கிருர்கள். நாட்டின் பல பாகங்களில் தொழில் அபிவிருத்தி ஏற்பட்டிருப் பதால் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் போகவேண்டிய அவசியம் வெகுவாக அதிகரித்துள் ளது. ஐரோப்பாவிலேயே ஜெர்மன் ரயில்வேயின் பண்டெஸ்பான் இத்துறை யில் மாபெரும் சாதனையை நிறைவேற்றியுள்ளது.

சில தினங்களுக்கு முன் முற்றிலும் நூதன ரயில் வண்டி பத்திரிகை நிருபர் களுக்கு வெள்ளோட்ட மிடப்பட்டு காட்டப்பட்டது. இதன் பெயர் VI 246. இது மிக வேகம் செல்லக்கூடி யது. வேகமாகத் திரும்பும் போது மோட்டார்சைக்கிள் எப்படி திரும்புமோ அப்படி திரும்புகிறது. சாதாரண ரயில்வண்டிகள் போடும் 'கடபுடா' சப்தங்கள் எதை யும் இது உண்டாக்குவ தில்லை. இது லேசில் விபத் திற்குள்ளாகாது, என்று பொறியியல் நிபுணர்கள் கூறுகின்றனர்.

மற்றொரு அதிசயமான ரயில்வண்டி வி/69. இந்த வண்டி வாயுவினாலும், டீஸல் எண்ணெயினாலும் இயங்குகிறது. இதன் என் ஜின் 1000 குதிரையோட்ட சக்திகொண்டது வி/69 மிக சக்திவாய்ந்ததென்பதுடன் திறமையாகவும் ஓட்டக் கூடியது.

மிக வேகமாகச் செல்லக் கூடிய ரயில்கள் உபயோகத் திற்கு வருவதையொட்டி ஜெர்மன் ரயில்வே மிகவும் திறமையான 'கன்ட்ரோல்' முறைகளைக் கண்டுபிடித்து அவைகளையும் நடைமுறை யில் அமுல் நடத்தி வரு கிறது. இதனால் எப்பேர் பட்ட விபத்து ஏற்படுவதும் தவிர்க்கப்படுகிறது. இந்தக் 'கண்ட்ரோல்' சாதனங்கள் மூலம் எவ்வளவு வேக மாகச் செல்லக்கூடிய ரயில் வண்டியையும் நிறுத்த முடி யும். இது காரணமாக ரயில் நிலையங்களின் அமைப்பும் அவைகளின் 'கன்ட்ரோல்' சாதனங் களும் மாற்றியமைக்கப்பட விருக்கின்றன. இந்த கன்ட்ரோல் சாதனங்களை இயக்கச்செய்ய புதிய பயிற்சி கள் அளிக்கவேண்டியிருக் கிறது. உலகிலேயே மிக வும் வேகமாகவும் அதே சமயத்தில் விபத்து இல்லா மலும் செல்லக்கூடியது ஜெர்மன் ரயில்வண்டிகள் தான்.

[யூ. பி. எஸ்.]

## அளப்பரிய தொழிற்சாலை

ஐரோப்பாவிலேயே மிகப் பெரிதும் புதுமையான பல வசதிகளைக் கொண்ட நவீன ரக சாராய வடிப் பாலை மேற்கு ஜெர்மனியில் உள்ள பிராங்க்பர்டில் அண்மையில் துவக்கப் பட்டது. 15 லட்சம் ஹெக்டோ லிட்டர் சாரா யத்தைத் தயாரிக்க வல்ல இந்தப் பிரும்மாண்டமான வடிப்பாலையைக் கவனித் துக்கொள்ள ஐந்தே பேர் கள்தான் அமர்த்தப்பட் டிருக்கிருர்கள். ஏனென்றால் சாராயம் தயாரிப்பதற்கான எல்லா வேலைகளையும் தானாக இயங்கும் இயந்திரங் களே செய்து முடித்து விடு கின்றன!

# கணக்குப் பொறி

தானாகவே பழுதுபார்த்துக்கொள்ளக்கூடிய ஒரு கணக்குப் பொறி (கம்ப்யூட்டர்) அமெரிக்காவில் கட்டி முடிக்கப்பட்டு வருகிறது. பல ஆண்டுக் காலம் நீடிக்கும் (ஆளில்லாத) விண்வெளிக் கலங்களின் விண்வெளிப் பயணங்களில் இது பயன்படுத்தப் பெறும் என எதிர்பார்க்கிறார்கள். சூரிய மண்டலத்திலுள்ள பல இயற்கைக் கோள்களுக்குச் சென்று வரப் பயன்படுத்தப்பட இருக்கும் பொறிகள் தம் பணிகளை நெடுங்காலம் சரிவர நிறைவேற்றுமா என்று உறுதியாக அறிவது இன்றியமையாதது. எனவே முதலில் அனுப்பப்படும் ஆளில்லாத கோள்களில் புதிய கணக்குப் பொறி பயன்படுத்தப்படும். வெகு வேகப் போக்குவரத்து, ஒலியினும் கடுகிச் செல்லும் விமானப் போக்குவரத்து, தற்போது அமைக்கப்பட்டுவரும் நுட்பமான மருத்துவப் பொறிகள் ஆகியவற்றைக் கட்டுப்படுத்தி இயக்குவதிலும் புதிய கணக்குப் பொறி பயன்படக் கூடும்.

ஆங்கிலத்தில் 'மோடுல்' என்று சொல்லப்படும் பல தனி உறுப்புக்கள் புதிய கணக்குப் பொறியில் உண்டு. ஒவ்வொரு 'மோடுல்' உறுப்புக்கும் அதே போன்ற ஒன்று அல்லது பல அதிகப்படி உறுப்புகள் உள்ளன. வேலை செய்யும் ஒரு 'மோடுல்' நிரந்தரமாகப் பழுதுபட்டுவிட்டால், அது பெற்றுவந்த மின் விசை தானாகவே மாற்று 'மோடுல்' உறுப்புக்குச் செல்கிறது; அது கெட்டுப்போன உறுப்பின் பணிகளைச் செய்யத் தொடங்குகிறது. இவ்வாறு நடைபெறுவதற்கு ஒரு வினாடியில் பல ஆயிரத்தில் ஒரு பங்குக் காலமே தேவை; எனவே, பொறியின் வேலை இடையில் தடைப்பட்டதே தெரியாது.

பிசகுகளைக் கண்டு பொறியிலுள்ள ஒரு கருவியே கண்டுபிடிக்கிறது. தானே சோதித்துப் பழுது பார்க்கும் (ஸெல்ஃப் டெஸ்ட்டிங் அண்ட் ரிப்பேரிங்) புதிய பொறிக்கு 'ஸ்டார்' என்று பெயரிட்டிருக்கிறார்கள். கலிஃபோர்னியா மாநிலத்தில் பாஸடேனா நகரிலுள்ள கலிஃபோர்னியா தொழில் நுட்பக் கழகத்தின் உந்துவிசை ஆய்வுக்கூடத்தில் (ஜே. பி. எல்.) அது கட்டி முடிக்கப்பட்டு வருகிறது. டாக்டர் அல்கிரேட் அவிஜீனிஸ் தலைமையில் இந்தப் பணி நடைபெறுகிறது. அமெரிக்க விண்வெளி நிலையம் (நாஸா) ஒரு மான்யம் வழங்கியுள்ளது.





# தங்கக் கம்பிளி

ஒவ்வொரு ஆண்டும் ஆஸ்திரேலியாவில் மெல்போர்ன் நகரில் 'கம்பிளிப் போட்டி' நடைபெறுவதுண்டு. உயர்ந்த ரக கம்பிளியை ஏலம் விடுவதுண்டு. இவைகளை ஜப்பான், இத்தாலி ஆகிய நாடுகளே வாங்கி வந்தன. இம்முறை, ஒரு 'பேல்' கம்பிளியை ஏறத்தாழ 10 ஆயிரம் ரூபாய் கொடுத்து ஜெர்மன் கம்பிளி கம்பெனியார் வாங்கியுள்ளனர். 1968-ம் ஆண்டின் உயர்ந்த ரக கம்பிளியைப் பயன்படுத்தி தயாரிக்கப்பட்ட கம்பிளி ஆடையை அணிந்திருக்கிறோம் என்பது பலருக்குத் தெரியாது.

[யூ. பி. எஸ்.]

# மைக்கிராஸ்கோப்

ஓர் அணுவையும் தனிப்பட எடுத்துக்காட்டி அது ரசாயன முறையில் இன்ன அணு என்று கண்டுபிடிக்கக்கூடிய ஆற்றல் மிக்க மைக்கிராஸ்கோப்பு ஒன்றை அமெரிக்காவில் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

உலோகங்கள், கலப்பு உலோகங்கள் ஆகியவற்றையும் இவற்றில் கலந்திருக்கக்கூடிய வேற்றுப் பொருள்களையும் ஆராய்வதற்கு இப் புதிய மைக்கிராஸ்கோப்பு உதவும். இவ்வளவு பெரிய ஆற்றல் வாய்ந்த மைக்கிராஸ்கோப்பு உலகத்தில் வேறு எதுவும் இல்லை.

பென்ஸில்வேனியா அரசாங்கப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் எர்வின் முல்லரும் அவருடன் பணியாற்றும் இருவரும் சேர்ந்து இப்புதிய மைக்கிராஸ்கோப்பைக் கண்டுபிடித்துள்ளனர். பேராசிரியர் முல்லர் ஏற்கெனவே உலோக அணுக்களை ஐம்பது லட்சம் மடங்கு பெரிதாக்கிக் காட்டவல்ல இன்னொரு மைக்கிராஸ்கோப்பை 1956-ல் கண்டு பிடித்தவர். அதன் உதவியால் அவர் அணுவைக் கண்ணால் கண்ட முதல் மனிதரானார்.

புதிய மைக்கிராஸ்கோப்பும் அதே அளவுக்கு அணுவைப் பெரிதாக்கிக் காட்டுகிறது. சுற்றுச் சூழ ஆயிரக்கணக்கான அணுக்கள் இருக்க, நடுவில் உள்ள ஒரு அணுவையும் தனித்துப் பிரித்துக் காட்ட வல்லது புதிய மைக்கிராஸ்கோப்பு.

உலோக இயலில் புதிய மைக்கிராஸ்கோப்பு நன்கு பயன்படும்; மேலும், ரசாயன முறைத் தொழில்களில் ரசாயன மாறுதல்களை உண்டு பண்ணித் தான் மட்டும் மாறாமல் இருக்கக்கூடிய உலோகப் பொருள்களை உருவாக்கவும் இது பெரிதும் உதவும் என்று எதிர்பார்க்கிறார்கள். உயிரியல் பொருள்களை ஆராயவும் கூட இது பயன்படலாம்.

புதிய மைக்கிராஸ்கோப்பை உருவாக்க அமெரிக்க அரசின் தேசிய விஞ்ஞானக் கழகத்தில் மானியம் ஒன்று உதவியது. டாக்டர் முல்லரோடு எஸ். பி. புரூக்ஸ் மெக்லேன் என்பவரும் ஜான் ஏ. பானிட்ஸ் என்பவரும் சேர்ந்து உழைத்தார்கள். மெக்லேன், ஆராய்ச்சித் துணைவர்; பானிட்ஸ் பல்கலைக்கழகத்தில் டாக்டர் பட்டத்துக்கு படிப்பவர்.

——





### எந்திரத்தைப் பேச வைக்க முடியுமா?

மனிதனுடன் உரையாடக்கூடிய சைபர்னடிக் எந்திரம் என்பது இன்று ஒரு விஞ்ஞானக் கற்பனையல்ல; நடைமுறை சாத்தியமான விஞ்ஞானப் பணியாகும். இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கான வழிகள் பற்றியும், இத்துறையில் கிடைத்துள்ள முதல் வெற்றிகள் பற்றியும் ஆராய்வதற்காக தாஷ்கெண்டில் ஒரு மாநாடு நடைபெற்றது; இதில் தானியங்கு எந்திரங்கள் பற்றியும், செயற்கைச் சிந்தனை பற்றியும் விவாதிக்கப்பட்டது.

'பத்து எண்கள் உள்ளிட்ட 60 சொற்களை ஒரு மின்னணுக் கணிதமானிக்குக் கற்றுக் கொடுத்துள்ளோம்' என்று இம்மாநாட்டில் சோவியத் விஞ்ஞானிகள் அறிக்கை சமர்ப்பித்துள்ளனர்.

ஒரு எந்திரத்தைப் பேச வைக்க முடியுமா? 'ஆம்; முடியும்' என்று சோவியத் விஞ்ஞானிகள் கூறுகின்றனர். வருங்கால மின்னணுக் கணித மானிகள் ஒரு விநாடியில் கோடிக்கணக்கான கடமைகளை நிறைவேற்ற முடியும்; அவற்றில் 'செயற்கைச் செவி'களும், 'மின்னணு வாய்'களும் அமைக்கப்பட்டு இருக்கும்.



என் வீட்டைச் சுற்றி நாலாபுறமும் சுவர் எழுப்பவும் சன்னல்களை அடைத்து வைக்கவும் நான் விரும்பவில்லை. எல்லா நாடுகளின் பண்பாடுகளும் கூடியவரை தாராளமாக என் வீட்டைச் சுற்றி வீச வேண்டும் என்றே விரும்புகிறேன். ஆனால் எதுவும் என்னை நிலைதடுமாறுமாறு தூக்கிவீச விடமாட்டேன். எனது சமயம் சிறை வீட்டின் சமயம் அல்ல. அதில் கடவுளுடைய படைப்புகளில் மிகவும் அற்பமானவற்றுக்கும் இடமுண்டு. ஆனால் இனம், மதம், நிறம் பற்றிய திமிரான கர்வத்துக்கு அதில் இடமில்லை.

— மகாத்மா காந்தி

## கல்வி போதனைக்கு டெலிவிஷன் உதவி

டச்சு கல்வி அதிகாரிகள் கல்வி போதனையில் டெலிவிஷனை எப்படியெல்லாம் பயன்படுத்துவது என்கிற விஷயமாக தீவிர சிரத்தைக் காட்டி வருகின்றனர். நெதர்லாந்தில் இம்முறையைப் பயன்படுத்தும் பள்ளிகள் இப்போது சுமார் 700 உள்ளன. இவைகளின் எண்ணிக்கை மேலும் அதிகரிக்கும்.

1966 – 67ல் கல்வி போதனையில் டெலிவிஷன் உபயோகித்துவந்த பள்ளிகளின் எண்ணிக்கை 450 ஆக இருந்தது. 1968முதல் மாதத்திற்கு 15 பள்ளிகள் வீதம் இவைகளின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. டெலிவிஷன் மூலம் பாட போதனை திட்டம் 1966-67ல் முறையாக அமுல் செய்யப்பட்டது. இந்த முறை தக்க பலனை அளித்திருப்பதாக பள்ளிகள் அறிவித்துள்ளன.

——

| 1966 Rs. Ps. | LIABILITIES (continued) | | |
|---|---|---|---|
| | 9. PROFIT & LOSS | | |
| 2,09,378 00 | Profit as per last Balance Sheet ... | 98,685 32 | |
| 4,002 00 | Add: Previous year's profit carried down ... | 3,146 28 | |
| 1,866 00 | Bonus excess appropriated Nil | | |
| 2,15,246 00 | | 1,01,831 60 | |
| | Less: Appropriations (1966) Rs. | | |
| | 1. Charity Fund 1,000 00 | | |
| | 2. General Reserve 20,000 00 | | |
| | 3. Dividends 62,712 50 | | |
| | 4. Gratuity Fund 5,000 00 | | |
| | 5. Investment Reserve Nil | | |
| 2,12,100 00 | 6. Bad Debts Reserve 12,542 50 | 1,01,255 00 | |
| 3,146 00 | | 576 60 | |
| | Add: Bonus excess appropriated | 2,753 99 | |
| 98,685 00 | Add: Profit as per Profit and Lost Account ... | 1,23,209 45 | |
| 1,01,831 00 | | | 1,26,540 04 |
| | 10. CONTINGENT LIABILITIES Nil | | |
| | Note: Provision to the full extent for future gratuities to staff has not been made | | |
| 7,50,37,367 00 | TOTAL Rs. | | 8,01,96,592 35 |

| 31-12-66 Rs. | PROPERTY AND ASSETS (continued) | | | Rs. Ps. |
|---|---|---|---|---|
| | Motor car | Rs. 47102 06 | | |
| | Add. Additions during the year | Nil | | |
| | Less: Sales during the year | Nil | | |
| 17,586 | Less: Depreciation to date | Rs. 33,032 83 | 14,069 23 | 11,21,94[illegible] 93 |
| 11,12,658 | | | | |
| | 11. NON-BANKING ASSETS ACQUIRED IN SATISFACTION OF CLAIMS: | Nil | | |
| | 12. PROFIT AND LOSS: | Nil | | |
| 7,50,37,367 | TOTAL ... | | | 8,01,96,592 35 |

| 31—12—66. Rs. Ps. | PARTICULARS OF ADVANCES | Amount Rs. Ps. |
|---|---|---|
| 3,69,78,817 | (i) Debts Considered good in respect of which the Banking Company is fully secured. ... | 4,09,89,319 50 |
| 46,84,568 | (ii) Debts considered good for which the Banking Company holds no other security than the debtors' personal security. ... | 20,75,406 13 |
| 1,47,057 | (iii) Debts considered good secured by the personal liabilities of one or more parties in addition to the personal security of the debtors ... | 29,37,355 85 |
| | (iv) Debts considered doubtful or bad not provided for. | Nil |
| 29,057 | (v) Debts due by the Directors or Officers of the Banking Company or any of them either severally or jointly with any other persons. | 64,001 07 |
| 1,50,257 | (vi) Debts due by Companies or firms in which directors of the banking company are interested as directors, partners or managing agents or in the case of private companies as members. ... | 92,281 69 |
| 99,406 | (vii) Maximum total amount of advances including temporary advances made at any time during the year to Directors or Managers or Officers of the Banking Company or any of them either severally or jointly with any other persons. ... | 73,118 50 |
| 2,18,585 | (viii) Maximum total amount of advances Including temporary advances, granted during the year to the companies or firms in which the Directors of the Banking Company are interested as Directors, partners or managing agents or in the case of private companies as members. ... | 2,28,073 35 |
| | (ix) Due from Banking Companies. | Ni |

## PROFIT AND LOSS ACCOUNT FOR THE YEAR ENDED 31—12—1967

| 1966 Rs. Ps. | EXPENDITURE | Rs. Ps. | 1966 Rs. Ps. | INCOME: (Less Provision made during the year for Bad and Doubtful Debts and other usual or necessary Provision) | Rs. Ps. |
|---|---|---|---|---|---|
| 32,30,558 | 1. Interest paid on deposits, borrowing etc. ... | 34,03,511 69 | 51,40,862 | 1. Interest and Discount ... | 58,09,400 03 |
| 17,48,689 | 2. Salaries Allowances Bonus & Provident Fund ... | 22,39,382 20 | 3,68,970 | 2. Commission, Exchange and Brokerage ... | 4,32,369 70 |
| 13,820 | 3. Directors' and Local Committee Members fees and allowances ... | 13,353 55 | 23,560 | 3. Rent .. | 28,505 40 |
| 3,27,475 | 4. Rent, Taxes, Insurance, Lighting etc., ... | 3,95,103 58 | | 4. Net profit on sale of investments, gold and Silver, land, premises and other assets (not credited to Reserve or any particular Fund or account) | |
| 5,084 | 5. Law Charges ... | 3,056 90 | | | |
| 1,13,961 | 6. Postage, Telegrams and Stamps ... | 1,25,698 40 | | | |
| | 7. Auditor's Fees: Audit Fees 4,000 00 ... Expensesfor Audit 4,000 00 ... | | | 5. Net Profit on revaluation of investments, gold and silver, land, premises and other assets (not credited to Reserve or any particular Fund or account) ... | |
| 8,000 | | 8,000 00 | | | |
| 58,701 | 8. Depreciation on and repairs to the Banking Company's Property... | 59,729 51 | | | |
| 82,428 | 9. Stationery, Printing, Advertisement etc. .. | 76,043 02 | | | |
| | 10. Loss from Sale of or dealing with non-banking assets | Nil | | 6. Income from non-banking assets and Profit from sale of or dealing with such assets ... | |
| 1,46,107 | 11. Other Expenditure | 1,22,793 44 | | | |
| 98,685 | 12. Balance of Profit ... | 1,23,209 45 | 3,00,116 | 7. Other receipts .. | 2,99,606 61 |
| 58,33,508 | Total ... | 65,69,881 74 | 58,33,508 00 | TOTAL ... | 65,69,881 74 |

PARTICULARS OF REMUNERATION RELATING TO SECRETARY: (i) Salaries 9183-33; (ii) Allowances 3061-09; (iii) Sitting fees Nil; (iv) Bonus 677-08; (v) Employer's contribution to provident fund, pension fund or any other Super annuation fund 742-50 (vi) Payments by way of gratuities, pensions or otherwise in excess of the employer's contribution and interest thereon Nil; and (vii) The monetary value of any other benefits or perquisites Nil. (Total Rs. 13,664-00.)

KARUR.
Dated: 16-5-1968.

மு. வெ. லக்ஷ்மீநாராயணகுப்தா,
President.
M. S. GOVINDARAJULU.
Vice-President

Directors:
Athi. K. VENKATASUBBARAYAN.
P. N. BALAGURUMURTHY.
K. N. V. MALAYALAM.
M. LAKSHMINARAYANAN.

C. RAMANATHA CHETTY.
Secretary.
16-5—1968

AUDITOR'S REPORT: I have audited the annexed Balance Sheet of the Karur Vysya Bank Ltd., Karur as at 31st December, 1967 and also the annexed Profit and Loss Account of the Bank for the Year ended on that date in which are incorporated the returns of all the Branches audited by me In accordance with the provisions of Section 29 of the Banking Regulation Act, 1949, read with the provisions to Sub-Sections (1) and (2) of Section 211 and Sub-Sections (5) of Section 211 and 227 (5) of the Companies Act, 1956, the Balance Sheet and Profit and Loss Account are not required to be and are not drawn up in accordance with the Sixth Schedule of the Companies Act 1956. The accounts are therefore drawn up in conformity with forms A & B of the Third Schedule to the Banking Regulation Act 1949. I Report that (a) I have obtained all the information and explanations which, to the best of my knowledge and belief were necessary for the purpose of my audit and have found them to be satisfactory. b) The transactions of the Bank which have come to my notice, have been withinthe powers of the Bank (c) In my opinion, proper books of account as required by law have been kept by the Bank so far as appears from my examination of those books; and proper returns adequate for the purpose of my audit have been received from the branches of the Bank. (d) The Bank's Balance Sheet and Profit and Loss Account dealt with by this report are in agreement with the Books of account and the returns; (e) In my opinion, and to the best of my information and according to the explanations given to me, the said accounts give the information required by the Companies Act, 1956, in the manner so required for Banking Companies and on such basis the said Balance Sheet gives a true and fair view of the State of affairs of the Bank as at 31st December, 1967 and the Profit and Loss Account gives a true and fair view of the profit for the Year ended upon that date.
To Shareholders

KARUR, 16—5—68.

N. RAMANUJAM, B. A., F. C. A., Chartered Accountant.

2,20,000/-மும் ஒதுக்கியது போக நிகர் லாபம் ரூ. 1,23,209-46 ஆகும். அத்துடன் முன் வருட லாப மிகுதி ரூ. 576-60ம், முன் வருடத்திய ஒதுக்கிய அதிகப்படி போனஸ் ரூ. 2,753-99ம் சேர்த்துப் பிரிக்கலாமென பிரிக்கக்கூடிய நிகர்லாபம் ரூ. 1,26,540-04 ஆனைக் கீழ்க்கண்டவாறு சிபார்சு செய்கிறோம்.

| | |
|---|---|
| தர்மநிதி | ரூ 1,300-00 |
| காப்பத் திரவியம் | ரூ. 27000-00 |
| கிராட்டியுடி நிதி | ரூ. 10,000-00 |
| வரி உட்பட 7% P.A. பங்கு லாபம் | ரூ. 87,797-50 |
| அடுத்தவருடம் கொண்டுபோக | ரூ. 442-54 |
| மொத்தம் | ரூ: 1,26,540-04 |

5. சென்ற வருடாந்திர மகாசபைக் கூட்டத்திற்கு முன்னதாக நம்பாங்கின் வைஸ்-பிரசிடெண்டாக இருந்து பாங்கின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்து அரும்பணியாற்றிய திரு. ஆதி. V. சூர்யநாராயணா அவர்கள் 20-6-67ம் தேதி அகால மரணமடைந்தார். 29-6-67ல் கூடிய மகாசபையார் அன்னாரின் அரிய சேவைகளைப் பாராட்டி. மறைவுக்கு ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்து தீர்மானித்துக் கொண்டதுடன் அன்னாரின் ஸ்தானத்துக்கு வேறு ஒருவரை தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி நிர்வாகத்தினருக்கு அதிகாரமளித்து இருந்தீர்கள். அதன்படி அன்னாரின் குமாரர் ஆதி. திரு S ஜனார்த்தனன் M.A. அவர்கள் டைரக்டராக இந்த மகாசபைக் கூட்டம் வரை 12-7-67 நிர்வாகசபைக் கூட்டத்தில் நியமனம் செய்யப்பட்டிருக்கிறார். அன்னாரின் சேவை பாங்கின் வளர்ச்சிக்கும். உங்களின் நிர்வாகத்தினருக்கும் பேருதவியாக இருந்து வருகிறது என்பதை மனநிறைவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

[8-ம் பக்கம் பார்க்க]








# இரத்த ஓட்டம் தரும் மின்விசை

உயிரினங்களின் ரத்த ஓட்டத்தை நிலையான மின் விசை உற்பத்தி வளமாக ஆக்குவதற்கு அமெரிக்க ஆராய்ச்சியாளர்கள் ஒரு முறை கண்டுபிடித்துள்ளனர்.

ஒரு வகையில் இந்த முறையை புனல் மின்விசை உற்பத்தியுடன் ஒப்பிடலாம். அருவிகளிலிருந்து விழும் நீரின் விசையைப் பயன்படுத்திப் பொறியியலாளர்கள் பலப் பல ஆண்டுகளாக மின்விசை உற்பத்தி செய்து வருகிறார்கள், அல்லவா? இதுபோலவே, புதிய கண்டுபிடிப்பதில் ரத்த ஓட்டம் மிகச் சிறிய அளவில் மின்விசை உற்பத்திக்குப் பயன்படுத்தப்படுகிறது.

இதுவரையில் ஆய்வுக்கூடச் சோதனைகளில் விலங்குகளுக்கே இந்த முறையைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். மனிதர்களுக்கும் இதனைப் பயன்படுத்தக்கூடும். நோயாளிகளின் உடலுக்குள் உள்ள மருத்துவக் கருவிகளை இயக்குவதற்கு அவர்களது ரத்த ஓட்டத்திலிருந்தே மின்விசை பெற வழி பிறக்கலாம்.

உதாரணமாக, நோய் காரணமாக இருதயம் பழுதுபட்டவர்களின் இயற்கையான இருதய துடிப்பைத் ஒழுங்குபடுத்துவதற்குப் பயன் படுத்தப்படும் சிறிய மின்னணுக் கருவி ஒன்றிற்குப் புதிய முறை, விசை வழங்கக் கூடும்.

இப்போது இவ்வகைக் கருவிகள் அறுவை முறையில் நோயாளியின் உடலுக்குள் வைக்கப்படுகின்றன. இவற்றின் மின்கலங்களிலுள்ள விசை தீர்ந்தபின்பு, புதிய மின்கலம் பொருத்துவதற்கு மீண்டும் அறுவை மருத்துவம் தேவைப்படுகிறது.

மாறாக, தற்போது ஆராய்ச்சியாளர்கள் உருவாக்கியுள்ளது போன்ற விசை உற்பத்திமுறையால், நோயாளியின் ஆயுட்காலம் முழுவதிலும் அவரது ரத்த ஓட்டத்திலிருந்து கிடைக்கும் மின்விசை உற்பத்தியிலிருந்தே உடலுக்குள் உள்ள மருத்துவக் கருவி கால வரம்பின்றிச் செயல்பட முடியும்.

வாஷிங்டன் அருகிலுள்ள மேரிலாண்ட் பல்கலைக் கழகத்தில் ஒரு டாக்டர், ஒரு ஆராய்ச்சிப் பொறியியலாலர் ஆகிய இருவரது தலைமையிலுள்ள ஒரு ஆராய்ச்சிக் குழு, புது முறையை உருவாக்கியது.

பல்கலைக்கழகத்தின் மருத்துவக் கல்லூரியைச் சேர்ந்த டாக்டர் ஆர். ஆதம் கல்வி, இயந்திரப் பொறியியல் பிரிவைச் சேர்ந்த டாக்டர் முஸ்தஃபா இ. தலாத் ஆகிய இருவரும் குழுவின் தலைவர்கள். பொது மருத்துவ அமெரிக்கத் தேசியக் கழகம் மேற்சொன்ன மூன்றாண்டு ஆராய்ச்சிக்கு மான்யங்கள் வழங்கி உதவியது. புதிய முறை நீண்ட காலத்துக்கு நம்பகமானதா, ஒரு சீராக நீடித்து இயங்குமா என்பது உறுதியாகப் புலப்படும் வரை, மனிதர்களுக்கு இந்த முறையைப் பயன்படுத்திச் சோதித்துப் பார்ப்பது தாமதமாகும்.

— —

(பேலன்ஸ்ஷீட் தொடர்ச்சி)

6. காலம் சென்ற திரு. ஆதி V. சூர்யநாராயண அவர்களுக்குப் பதில், நிர்வாக சபையில் நெடு நாளாக அங்கம் வகித்து பாங்கின் வளர்ச்சிக்கு சேவை செய்துவரும் திரு. M. S. கோவிந்தராஜுலு செட்டியார் அவர்கள் வைஸ்-பிரசிடென்டாக தேர்ந்தெடுக்கப்பட்டு உங்கள் அனைவரின் ஒருமனதான ஆதரவால் சிறப்பான சேவை செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை உங்களுக்குத் தெரிவித்துக்கொள்வதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

7. நமது விழுப்புரம் ஆலோசனைக்குழு உறுப்பினராக இருந்த திரு P. V. அருணசலம் செட்டியார் அவர்கள் காலமானது குறித்து வருந்துகிறோம். அவர்கள் பாங்கின் வளர்ச்சிக்காக செய்தசேவையைப் பாராட்டுகிறோம்.

8. பாங்கின் வளர்ச்சிக்கு காரணமான எல்லா டிபாசிட்டர்களுக்கும், ஆலோசனைக் குழுவினருக்கும் வாடிக்கைதாரர்களுக்கும் நன்றி தெரிவித்துக்கொண்டு அவர்களின் நீடித்த ஆதரவையும் ஒத்துழைப்பையும் என்றும் தொடர்ந்து வேண்டுகிறோம்.

9. பாங்கின் அதிகாரிகள், அலுவலர் அனைவரும் ஆற்றியுள்ள பணியைப் போற்றுகிறோம்.

10. மகாசபைக் கூட்டத்திற்கு பங்குதாரர்கள் அனைவரும் வந்திருந்து பாலன்ஸ்ஷீட்டையும், லாப நஷ்டக்கணக்கையும் நிர்வாக சபையாரின் அறிக்கையையும் அங்கீகரிக்கக் கோருகிறோம்.

*நிர்வாகசபை உத்திரவுப்படி,*
(ஒப்பம்)
மு. வெ. லக்ஷ்மிநாராயண குப்தா,
*பிரசிடெண்ட்.*
*16—5—1968,*
*கரூர்,*

---

[4-ம் பக்கத் தொடர்ச்சி]

செலுத்திப் பரிசோதித்துக் கொண்டனர்.

சோபியாவில் உள்ள ஆராய்ச்சி மற்றும் கண்டுபிடிப்புகளுக்கான கழகம் இந்த மருந்தைக் கண்டுபிடித்த மருத்துவ நிபுணர்களுக்கு கண்டுபிடிப்பதற்கான சான்றிதழ் வழங்கியுள்ளது.

Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Incuding 4 special numbers Rs. 10.